Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



குறிக்கோள்

நாட்டிலே அமைதியை நிலவச் செய்து உற்பத்தியைப் பெருக்கி தொழிலாளர் வாழ வழி செய்ய வேண்டும் என்பதே நமது குறிக்கோள்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

போற்றுதல்

பிறப்பதும் மறைவதும் இயற்கை. ஆனால் மக்கள் போற்றத்தக்க வகையில் காரியமாற்ற வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 17 - 11 - 82 புதன் வெளியூர் 18 - 11 - 82 வியாழன் இதழ்: 31




**கேள்வி**

பெரியார், அண்ணா ஆகியோரின் வழித்தோன்றல் என்று தன்னை கரிகாலன் கூறிக்கொள்கிறாரே உண்மையா?

**பதில்:**

வழித் தோன்றல் அல்ல குழித்தோன்றல்.

**கேள்வி:**

திருந்தவே மறுக்கிற மக்களுக்காக கருணாநிதி உழைக்கிறாராமே?

**பதில்:**

திருந்த வேண்டியது மக்களா கருணாநிதியா?

**கேள்வி:**

இன்றைய அரசியலில் இப்படியும் அப்படியும் ஆடிக்கொண்டிருக்கிற "பெண்டுலம்" யார் என்ற கேள்விக்கு: 'பெயரைச்சொல்ல விரும்பவில்லை' என்று கரிகாலன் பதிலளித்திருக்கிறாரே?

**பதில்:**

யாரோ அங்கு 'ஆடி'க்கொண்டிருக்கிறார்கள். அது மட்டும் தெரிகிறது.

**கேள்வி:**

'கானமுயலெய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது' என்ற குறளுக்கு விளக்கம் என்ன?

**பதில்:**

கோழையைக் கொல்வதைவிட வீரனைத் துரத்துவது மேல்.

**கேள்வி:**

ராமமூர்த்தி கமிஷன் விசாரணையை மற்ற ஏடுகள் இருட்டடிப்பு செய்கிறது என கரிகாலன் கூறுவது உண்மையா?

**பதில்:**

இல்லை! வெளியிட வேண்டிய அளவுக்கு செய்திகளை வெளியிடுகின்றன. பாவம்...... கரிகாலனுக்கு பகலிலேயே பசு மாடு தெரியாது. இருட்டில் எங்கே எருமை மாடு தெரியப்போகிறது.

**கேள்வி:**

அறநிலையத்துறை அமைச்சரின் கண்களை அதிகாரமும், பதவியும் மறைப்பதாகக் கரிகாலன் கூறியுள்ளாரே?

**பதில்:**

ஆணவமும், அகங்காரமும் கொண்டவரின் புலம்பல் அது.

**கேள்வி:**

விசாரணை கமிஷன்களின் அறிக்கைகளைக் கழக அரசு ஏற்பதில்லை என்று கரிகாலன் கூறுகிறாரே?

**பதில்:**

கமிஷன்களின் அறிக்கைகளை எல்லாம் ஏற்க வேண்டும் என்றால் இவர் சர்க்காரியா கமிஷன் அறிக்கையை ஏற்க வேண்டிவருமே!

**கேள்வி:**

அடிநாள் தொட்டு தி. மு. க.வை வளர்த்தவர்களுக்கு, இளைஞர் அணியினர் ஊன்றுகோலாக இருக்க வேண்டுமாமே?

**பதில்:**

அடி நாள் தொட்டு கழகத்தை வளர்த்தவர்கள் இன்னும் அங்கே இருக்கிறார்களா? ஆச்சரியம்.

★ பாண்டிச்சேரி முழுவதும் 144 தடையுத்தரவு

★ தொழிலாளர்கள் கோஷம் போடவும் தடை

## அடிப்படை போனஸ்கூட தர மறுக்கும்

# தி.மு.க.முதல்வரின் சர்வாதிகாரம்

## மின் ஊழியர்களுக்கு மிரட்டல்

பாண்டிச்சேரி, நவ. 17- வேலைக்கு உடனடியாகத் திரும்பாவிட்டால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள மின் ஊழியர்களை புதுவை அரசு மிரட்டியுள்ளது.

புதுவை மாநில மின்சார ஊழியர்கள், குறைந்தபட்ச போனஸ் கோரி வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளது தெரிந்ததே.

மின்சார ஊழியர்களின் வேலை நிறுத்தத்தால், பாண்டிச்சேரி நகரில், மின் சப்ளை பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

ஊழியர்கள் நீண்ட நாட்களாக இப்பிரச்சினையை கிளப்பி வந்த போதிலும், தி. மு. க. முதல்வரான டி. ராமச்சந்திரன் ஊழியர் பிரதிநிதிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தி பிரச்சினையை தீர்க்கவில்லை. அதற்கு பதிலாக முடிவு செய்யவேண்டியது மத்திய அரசு தான் எனக் கூறி மெத்தனமாக இருந்து வருகிறார்.

இதற்கிடையில் மின் ஊழியர்கள் போராட்டத்திற்கு புதுவை அரசு ஊழியர்கள் ஆதரவு தெரிவித்தனர்.

முதல்வர் டி. ராமச்சந்திரன் தனது சகாக்களுடனும், அரசு அதிகாரிகளுடனும் ரகசிய ஆலோசனை நடத்தி வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள ஊழியர்கள் மீது கடும் நடவடிக்கை எடுப்பது என முடிவு எடுத்தாராம்.

### 144 தடை உத்தரவு

இதன் பிறகு பாண்டிச்சேரி மாவட்டக் கலெக்டர் பாண்டிச்சேரி முழுவதற்கும் 144 தடை உத்தரவு பிறப்பித்துள்ளார்.

இந்த உத்தரவின்படி, ஆயுதங்களை எடுத்துச் செல்லவும் கோஷங்கள் இடவும் தடை விதிக்கப்பட்டுள்ளது.

### கடும் நடவடிக்கை

புதுவை அரசு தலைமைச் செயலாளர் ஆர். பந்திரிநாத் வெளியிட்டுள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

மின் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தால் மக்களுக்கு பெரும் தொல்லை ஏற்பட்டுள்ளது. இன்று (17-ந்தேதி) மதியத்திற்குள் வேலைக்குத் திரும்ப வேண்டும்.

இல்லாவிட்டால் நிலைமையைச் சமாளிக்க அரசு தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு பந்திரிநாத் தெரிவித்துள்ளார்.

கடந்த 8-ந்தேதி முதல் மின் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

## கேசவளத்தில் புதிய அணை: அமைச்சர் ராஜாமுகமது பேட்டி



சென்னை, நவ. 17— தமிழக நீர்ப்பாசன ஆலோசனைக் குழுவின் கூட்டம் இன்று காலை 10-30மணிக்கு தலைமைச் செயலகத்தில் கூடியது.

அமைச்சர் ராஜா முகமது தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் சென்னை நகருக்கு குடிநீர் அளிப்பது பற்றியும் தமிழகத்தில் நிறைவேற்றப்பட்டுள்ள நீர்ப்பாசனத் திட்டங்கள், மற்றும் புதிய திட்டங்கள் குறித்தும் ஆலோசிக்கப் பட்டது.

ஆலோசனைக் கூட்டம் முடிந்த பிறகு அமைச்சர் ராஜா முகமது நிருபர்களிடம் கூறியதாவது:—

இன்றைய கூட்டத்தில் கடந்த முறை நடந்த கூட்டத்தில் விவாதிக்கப் பட்ட பொருள்கள் குறித்து ஆய்வு செய்ய பட்டது.

நீர்ப்பாசன கால்வாய்களை (குடிமராமத்து) பராமரிக்கும் வேலைகளை கவனிப்பதற்காக ஆயக்கட்டுக் குழுக்கள் அமைப்பது பற்றிய பரிந்துரையை அரசு கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டுள்ளது.

எந்த முறையில் இந்தக் குழுக்களை அமைப்பது என்பது பற்றி முடிவு எடுக்கப்பட்டுள்ளது,

காற்றாடி யந்திரங்களைப் பயன்படுத்தி சமுதாயக் கிணறு பொதுக் கிணறுகளில் நீர்இறைப்பதற்காக பரிசோதனை முறையில் தமிழகத்துக்கு 30 காற்றாடிகளை மத்திய அரசு இலவசமாக கொடுத்திருக்கிறது.

இந்தக் காற்றாடிகளை தமிழகத்தில் பயன்படுத்தி அதன் பலன்களை பற்றிய கருத்துக்களை நீலநிர் தலைமைப் பொறியாளர் சான்றெடுத்துள்ளார். அதையொட்டி ஐ, ஆர். டி, பி. திட்டத்தின் மூலம் தமிழகத்தில்

(3-ம் பக்கம் பார்க்க)

ஆளைக்கொல்லும் விஷத்தன்மை கொண்ட

# மது கஷாயம் தயாரிப்பு: டாக்டர் உட்பட 8 பேர்கள் கைது

சென்னை. நவ. 17- கிடு கிடுவென்று போதையேற வைக்க விஷ அமிலத்தை மதுக் கஷாயம் என்ற பெயரில் கலந்து விற்ற பெரிய மோசடிக் கும்பல் ஒன்றை போலீசார் வளைத்துப் பிடித்துள்ளனர்.

18 மாத காலம் இந்த மோசடி வியாபாரம் நடத்திய 8 பேர்களை போலீசார் கைது செய்துள்ளனர். இதில் மூவர் அப்ரூவர்களாக ஆகியுள்ளனர்.

சென்னை நகரிலும் வெளியிடங்களிலும் இந்தக் கும்பல் மதுக் கஷாயம் என்ற பெயரில் இந்த விஷம் கலந்த பாட்டில்களை விற்பனைசெய்துள்ளது.

### சந்தன அஸ்வம்

இந்த மதுக்கஷாயத்திற்கு "சந்தன அஸ்வம்" என்று பெயரிட்டு இருந்தனர்.

இந்த சநதன அஸ்வத்தில் "குளோரல் ஹைட்ரேட்" என்ற விஷ அமிலம் கலக்கப்பட்டு இருப்பது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

### உயிரை பறிக்கும் விஷ அமிலம்

குளோரல் ஹைட்ரேட் என்ற அமிலம் மிகவும் விஷத்தன்மை கொண்டதாகும்.

இதைச் சாப்பிட்டால் மயக்கம் வரும், நரம்பு தளர்ச்சி ஏற்படும். பார்வைகூட இழக்க நேரிடும்.

உடலில் சில பாகங்களில் முடக்குவாதம் ஏற்படும். மலட்டுத்தன்மை ஏற்படக்கூடும் லிவர் கெடும், கொஞ்சம் அதிகமாக சாப்பிட்டால் உயிரே போய் விடும்.

ஒரு சிறு துளி சாப்பிட்டாலே கடுமையான மயக்கம் வந்து விடும். அப்படிப்பட்ட பயங்கர விஷத்தன்மை கொண்டது.

கைதானவர்கள் அத்தகைய குளோரல் ஹைட்ரேட் அமிலத்தை அஸ்வத்தில் (மதுக் கஷாயம்) கலந்து விற்றுள்ளது.

இதுபற்றிய தகவல் குற்றப்புலனாய்வுத் துறைக்கு வரவே இதுபற்றி புலன் விசாரணை நடத்தப்பட்டது.

தீவிரமான புலன் விசாரணைக்குப் பிறகு இந்தக் கும்பலில் பலர் ஈடுபட்டு இருப்பது தெரிய

(3-ம்பக்கம்பார்க்க)

## தெரியாது மகனே!

"அப்பா!"

"என்னடா?"

"கோபாலபுரத்துக் குடும்பம் 'ஈநாடு' என்ற மலையாள சினிமாவை 'இது எங்க நாடு' என்று தமிழில் எடுக்கிறார்களாமே"?

"ஆமாம்!"

"அதில் மாணவர்களை போலீசார் அடிப்பது போல் ஒரு காட்சி வருகிறதாமே?"

"ஆமாம்!"

"அந்தக் காட்சி இப்போது படமாக்கப் படுகிறதாமே?"

"அந்த காட்சியைப் பார்த்தால் கிளைவ் ஆஸ்டல் நினைவு அல்லவா வரும்?"

"தெரியாது மகனே!"



## அரசு அறிக்கை

மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் நாள்தோறும் பல விண்ணப்பங்கள், கோரிக்கைகள் வருகின்றன.

நேரிடையாக முதலமைச்சர் அவர்களிடமோ, அவரது செயலாளர், நேர்முக உதவியாளர்களிடமோ கொடுக்கப்படும் விண்ணப்பங்கள், கோரிக்கைகள், இதைப்போன்றே மற்ற அமைச்சர்களிடமோ அவர்களது நேர்முக உதவியாளர்களிடமோ நேரில் கொடுக்கப்படும் விண்ணப்பங்களும், பதிவு அஞ்சலில் அனுப்பப்படும் கடிதங்களும் சாதாரண அஞ்சலில் அனுப்பப்படும் கடிதங்களும் மாத்திரமே பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

இதைத் தவிர்த்து வேறு மூன்றாமவர் மூலமாகத் தொடர்பு கொண்டு கொடுக்கப்படும் கோரிக்கைகள், விண்ணப்பங்கள் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படமாட்டாது என்பது பொது மக்களுக்குத் தெரிவிக்கப்படுகிறது.

— தலைமைச் செயலர்

DIPR-66694/82

அமைச்சர் அரங்கநாயகம் யோசனை

# தொழில் துறையில் காலத்திற்கேற்ப மாறுதல் தேவை

**சென்னை, நவ. 17- தொழில் அபிவிருத்தியடைய காலத்திற்கேற்ப அறிவாற்றலை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.**

சென்னை பல்கலைக் கழகத்தின், முதியோர் மற்றும் தொடர் கல்வித் துறையின் சார்பில் நடத்தப்படும் தொழில் நுட்ப பாடப் பிரிவுகளை துவக்கி வைத்துப் பேசுகையில் அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:—

புதிய ஆற்றலை பயன்படுத்தி, மாறுதல்கள் செய்யாவிட்டால், எந்த தொழில் துறையானாலும், வியாபாரம் ஆனாலும் சீர்குலையும்.

அந்த வகையில் யார் யார் எந்தத் தொழிலில், வியாபாரத்தில் ஈடுபட்டாலும், அறிவு ஆற்றலை அந்த அந்த காலத்திற்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

இதைப் பற்றி கவலைப் படவில்லை என்றால் போட்டி உள்ள இந்த உலகத்தில் எந்த தொழிலிலும் சமாளிக்க முடியாது.

## புதியன புகுத்துதல்

நேற்றைய பழையகருவிகளை வைத்து தொழில் செய்வதை விட, இன்றைய புதிய கருவியில் தொழில் செய்வது நல்லது. காலத்தோடு நாமும் போட்டி போட்டுக் கொண்டு செல்ல வேண்டும்.

இந்த வகையில் ஆராய்ச்சி அபிவிருத்தி பணிகளில் ஜப்பானியர்கள் நல்ல பயிற்சி பெற்றுள்ளனர்.

ஆராய்ச்சி, அபிவிருத்தி பணிகளுக்கு யார் முக்கியம் தந்து அறிவு ஆற்றலை உடனுக்குடன் மாற்றியமைத்துக் கொண்டு செயல் படுகிறார்களோ அவர்களே உலகத்தில் சிறந்து விளங்குகின்றனர்.

பல்கலைக்கழகத்தின் சார்பில் புதிய பிரிவுகள் துவக்குவது தொழில் துறை வியாபாரத் துறையில் இருப்பவர்களுக்கு உதவி பயக்கும்.

## கைத்தறி விற்பனை ரூ.100கோடி இலக்கு

கோ-ஆப்-டெக்ஸ் நிறுவனம் இந்த ஆண்டு 100 கோடி ரூபாய்க்கு துணிகளை விற்க திட்டமிட்டுள்ளது. தீபாவளிக்கு ரூ. 45 கோடி விற்கும் என்று குறியீடு நிர்ணயிக்கப்பட்டது. விற்பனை ஏறக்குறைய 45 கோடி ரூபாயை தொட்டுக் கொண்டுள்ள நிலையில் உள்ளோம்.

இப்படி பெரிய அளவில் வியாபாரம் செய்யும் இந்த நிறுவனம் பணியாளர்களுக்கு பயிற்சி, துறை பற்றி ஆய்வு, வியாபார ஆய்வு செய்து செயல் பட்டால் மேலும் வியாபாரம் பெருக வாய்ப்பு உள்ளது.

அப்படி செயல்பட்டு மேலும் ரூ. 10 கோடி விற்றால் நெசவாளர்களுக்கு நன்மை பயக்கும்.

எந்தத் தொழில்-வியாபாரமாக இருந்தாலும், நேற்று இருந்ததைவிட இன்று சிறப்பாக இருக்க வேண்டும் என்று எண்ண வேண்டும். இன்றுள்ள திருப்தியே போதும் என்ற நிலை கூடாது.

கோ-ஆப்டெக்ஸ் நிறுவனங்களில் பணிகள் சிறப்பாக நடக்க சேல்ஸ்மேன் முதல் மேலாளர் வரை உள்ளவர்களுக்கு என்னென்ன பயிற்சி தர வேண்டுமோ அதைத்தர வேண்டும் என்று அண்ணா நிர்வாக பயிற்சி நிலையத்தை கேட்டுள்ளோம்.

அவர்களும் பயிற்சி தர சம்மதம் தந்துள்ளனர்.

இப்படியெல்லாம் மாற்றியமைத்து செயல்படும் போது நாமும் மற்றவர்களுடன் போட்டி போட்டு முன்னேற முடியும்.

தென்னிந்தியாவிலுள்ள நூற்பு ஆலைகளில், கோவையிலுள்ள சித்ரா நிறுவனம், சிறந்த முறையில் ஆய்வுப்பணிகள் செய்து முன்னேறி வருகிறது.

தொழிலுக்கு ஏற்ப ஆட்களை உருவாக்கித் தருவது தேவையான ஒன்று.

தொழில் துறையைச் சேர்ந்தவர்கள், பல்கலைகழகத்தை அணுகி "எதிர்காலத்தில் இப்படிப்பட்ட பயிற்சி பெற்றவர்கள் எங்களுக்குத் தேவை! அவர்களை உருவாக்கித் தாருங்கள்" என்று விரும்பி முடிந்தால் அவர்களே அதற்காகும் செலவினையும் அளித்து துவங்கும் நிலை ஏற்பட்டால் அது பல்கலைக் கழக வளர்ச்சியின் முக்கிய கட்டமாகும்.

அந்த நிலை வந்தால் பல்கலைக்கழக பேராசிரியர்கள் பாதிப்பேர் அரசு சம்பளம் பெறும் நிலை மாறும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.

### நிகழ்ச்சி விவரம்

இந்த புதிய பாடப் பிரிவுகள் துவக்க விழாவிற்கு சென்னை பல்கலைக்கழக துணை வேந்தர் சாந்தப்பா தலைமை தாங்கினார்.

தொழிலதிபர் சித்ரா நாராயணசாமி, மருத்துவ கல்வி இயக்குநர் டாக்டர் ஞானதேசிகன், தொழிற் கல்வி இயக்குநர் வையாபுரி, சென்னை பல்கலைக்கழக பதிவாளர் குமாரசாமி ஆகியோரும் பேசினர். பல்கலைக்கழகத்தின் முதியோர் கல்வி துறையைச் சேர்ந்த டாக்டர் ஆர். ராஜகோபால் அனைவரையும் வரவேற்றார். ராஜகுமாரி சந்திரசேகரன் நன்றிகூறினார்.

---

### அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

நவ. 26-ந் தேதி காலை 5-20 மணி சேலம், 9 மணி சேலம், தர்மபுரி மாவட்ட பாசன திட்டங்கள் அடிக்கல் நாட்டு விழா, இரவு 11-30 மணி திண்டுக்கல், 27-ந் தேதி காலை 11 மணி கொடைக்கானல் மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி கட்டிடத் திறப்பு விழா. 28, 29-ந் தேதி திண்டுக்கல்.

### திருமணம்

ஏரியூர் சோமசுந்தரம் மகள் ஜோதிமணிக்கும் மித்ராவயல் குருசாமியின் மகன் ராஜமோகனுக்கும் வரும் 28ந் தேதி காலை 11-30 மணிக்கு ஏரியூரில் முசிறிப்புத்தன் தலைமையில் திருமணம் நடைபெறுகிறது.

மணவிழாவில் ஈ.வெ.ஆ. வள்ளிமுத்து எம்.எல்.சி., பொ. அன்பழகன், எம்.பி. இளவரசன், அங்குசாமி, பாலகுரு, லியாகத்அலிகான் மற்றும்பலர் வாழ்த்துரை வழங்குகின்றனர்.

---

# தியேட்டர்களுக்கு வரி விதிப்பு மாற்றம்: அரசுக்கு நன்றி

**சென்னை, நவ. 17- காம்பவுண்டு வரி விதிப்பு முறையை முதல் நிலை தேர்வு நிலை நகராட்சிகளுக்கும் விஸ்தரித்து அரசு உத்தரவிட்டுள்ளதற்காக திரைப்பட அரங்குகளின் பொதுச் செயலாளர் டி. ராமானுஜம் நன்றி தெரிவித்துள்ளார்.**

திரையரங்குகள் காம்பவுண்டு வரி முறையை முதல் நிலை, மற்றும் தேர்வு நிலை, நகராட்சிகளுக்கும் விரிவாக்கம் செய்து அரசு உத்தரவிட்டது.

அரசுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் திரையரங்கு உரிமையாளர்கள் சங்கத்தின் பொதுச் செயலாளர் டி. ராமானுஜம் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அதில் அவர் கூறியிருப்பதாவது:

இந்த அவசர சட்டம் வெளியிட்டதற்கு தமிழ் நாடு திரையரங்குகளின் அதிபர்கள் சார்பில் முதலவருக்கும், செய்தி சுற்றுலாத்துறை அமைச்சருக்கும் வருவாய்த்துறை அமைச்சருக்கும் அதிகாரிகளுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

முதலநிலை நகராட்சிப் பகுதிகளிலுள்ள திரையரங்குகள் வாரம் 22 காட்சிகளுக்கு 30 சதவிகிதம் கேளிக்கை வரியையும் தேர்வு நிலை நகராட்சிப் பகுதியிலுள்ள திரையரங்குகள் வாரம் 24 காட்சிகளுக்கு 31 சதவிகித கேளிக்கை வரிகளையும் செலுத்த அனுமதிக்கபபட்டிருந்தது.

### வரிச் சலுகை

தற்பொழுது வெளியிடப்பட்டிருக்கும் இந்த அவசரச் சட்டத்தின் மூலம்இருநிலை நகராட்சி பகுதிகளிலும் 29 காட்சிகளை நடத்தி முதல்நிலை நகராட்சித் திரையரங்குகள் 30 சதவிகித கேளிக்கை வரியும் தேர்வு நிலை நகராட்சித் திரையரங்குகள் 31 சதவிகித கேளிகை வரியையும் செலுத்த வழி வகை செய்யப்பட்டிருக்கிறது.

இதனால் தமிழக அரசிற்கு எந்த இழப்பும் ஏற்படாது. திரைப்பட தொழிலும் இதனால் மிகுந்த பயனடையும்.

இவ்வாறு டி. ராமானுஜம் கூறியுள்ளார்.

---

# சோப்பை விரும்பிச் சாப்பிடும் சிறுமி

பாங்காங், நவ. 17— பாங்காங்கில் இருந்து 128 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ரேயாங் பகுதியில் வசிக்கும் சிறுமி திப்புவான் சமர்சிட் இவளுக்கு வயது 8.

இந்தசிறுமியின் வீட்டில் அடிக்கடி குளியலுக்கு உபயோகப்படும் சோப் காணாமல் போனது.

சிறுமியின் பெற்றோர்களின் தீவிர கண்காணிப்பை அடுத்து இந்தச் சோப்புகளை சிறுமி விரும்பிச் சாப்பிடுவது தெரியவந்தது.

சோப்பு சாப்பிட மிகவும நன்றாக இருப்பதால் அதைச் சாப்பிடுகிறேன் என அந்தச் சிறுமி கூறுகிறாளாம்.

தற்போதைக்கு இந்த சிறுமிக்கு சோப் சாப்பிடுவதால் கோளாறு ஏற்படாவிட்டாலும் தொடர்ந்து அச்சிறுமி சோப் சாப்பிட்டால் சிறுமிக்கு கடும் வயிற்றுக் கோளாறு ஏற்படும் என டாக்டர்கள் எச்சரித்துள்ளனர்.

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: E. PARASURAMAN.

---

ஓய்வுக்கு ஒதுங்கிய போது சம்பவம்:

# கட்டிடம் இடிந்து இரண்டு பெண்கள் சாவு

கடலூர், நவ. 17— கள்ளக்குறிச்சி தாலுக்கா கச்சிராபாளையத்தில் அரிசிமில் புகைபோக்கி அருகே ஓய்வுக்காக இரண்டு பெண்களும் ஒரு சிறுமியும் உட்கார்ந்திருந்தனர்.

அப்போது புகைப் போக்கி கூண்டு திடீரென இடிந்து விழுந்ததில் இரண்டு பெண்களும் இடிபாடில் சிக்கி இறந்தனர். சிறுமி படுகாயமடைந்த நிலையில் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

---

# அமெரிக்க விண்வெளி வீரர்கள் திட்டம் ரத்து

கென்னடிமுனை, நவ.17— அமெரிக்க விண்வெளிக் கப்பலான கொலம்பியா தற்போது விண்வெளியில் சுற்றிக் கொண்டிருப்பது தெரிந்ததே.

இந்தக் கப்பலில் பயணம் செய்யும் 2 அமெரிக்க விண்வெளி வீரர்களும், விண்வெளியில் நடப்பதற்கு திட்டமிடப்பட்டு இருந்தது.

ஆனால் ஒரு விண்வெளி வீரரின் உடையில் இருந்த ஆக்ஸஜன் சாதனத்தில் கோளாறு ஏற்பட்டதால், விண்ணில் நடக்கும் சாதனையை அமெரிக்க விண்வெளி தலைமை நிலையம்ரத்து செய்து விட்டது.

கொலம்பியா விண்வெளிக் கப்பல் தற்போது குறிப்பிட்ட நாளுக்கு மேலும் ஒரு நாள் விண்வெளியில் இருக்கும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

1982-83-ல்

# ஆதிதிராவிடர்களுக்கு ரூ. 2 கோடியில் வீடுகள் கட்ட திட்டம்

**தஞ்சை, நவ. 17. 1982-83-ல் ஆதிதிராவிடர்களுக்கு 2 கோடி ரூபாய் மதிப்பீட்டில் வீடுகள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது**

தஞ்சை மாவட்டக் கலெக்டர் மெய்கண்டதேவன் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

1982—83—ல் தமிழ் நாட்டில் ஆதிதிராவிடர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க 2 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

இந்த வீடுகளை தமிழ்நாடு ஆதிதிராவிட வீட்டுவசதி வாரியம் கட்டும். தஞ்சாவூர், பட்டுக்கோட்டை ஆகிய நகரங்களில் குடிநீர் திட்டங்களுக்காக 13 லட்சத்து 20 ஆயிரம் ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

மாவட்டத்தில் 5.33 லட்சம் ஏக்கர் நிலத்தில் சம்பா நடவு முடிந்து விட்டது.

இவ்வாறு கலெக்டர் மெய்கண்டதேவன் கூறினார்.

---

இஸ்லாமிய கலாச்சார கழகமே இல்லையா?

# அப்துஸ்ஸமத் புளுகுக்கு கலாச்சாரக் கழக செயலாளர் சாட்டை

**சென்னை, நவ. 17- இஸ்லாமிய கலாச்சாரக் கழகம் என்ற அமைப்பே இல்லை என்று பொய்யுரைத்த அப்துஸ் சமத்திற்கு அந்தக் கழகத்தின் செயலாளர் ரங்கூன் சுலைமான் சுடச்சுட பதில் அளித்திருக்கிறார்.**

அவர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

இந்திய யூனியன் முஸ்லீம்லீக் தமிழக கிளையின் தலைவர் அண்மையில் தமது பத்திரிக்கையில் எங்களது இஸ்லாமியக் கலாச்சாரக் கழகத்தைப்பற்றி குற்றச்சாட்டுகளை அள்ளி வீசியிருக்கிறார்.

இது என்ன புதுச் சங்கம் என்ற மகுடத்தின் கீழ் எங்களது இஸ்லாமிய கலாச்சாரக் கழகத்தை "இஸ்லாமியக் கலாச்சார சங்கம்" என்ற பெயரிலும் திடீரென்று தேர்தலுக்கு முளைத்தது என்றும். பல்லாயிரக்கணக்கான ருபாய்களைச் செலவழிக்கும் தகுதி எப்படி வந்தது என்றும் கேட்டிருக்கிறார்!

நாங்கள் சமுதாய உணர்வுள்ளவர்களின் உதவியைக் கொண்டு, பத்திரிகைகளில் விளம்பரம் செய்தோம். ஆனால் வசூல் செய்வதை வாய்க்குள் போடக்கூடியவர்களுக்குஇதுபுதுமையாகத் தெரியாமல் எப்படித் தெரியும்?

இஸ்லாமியக் கலாச்சாரக் கழகம் இஸ்லாத்திற்கு செய்த சேவை என்ன என்றும், அந்த இயக்கத்தில் இனம் தெரியாதவர்கள் யாரோ இருப்பதாகவும் எழுதிக் காட்டுகிறார்!

### திரும்பிப்பார்!

மதுரை மாவட்ட முஸ்லிம் லீக் ஊழியர் கே. அம்சா முகமது, முன்னாள் முஸ்லிம் லீக் கவுன்சிலர், ரெங்கூன் சுலைமான். 'மணிவிளக்கு' 'மணிச்சுடர்' 'அறமுரசு' போன்ற பத்திரிக்கைகளில் பணியாற்றிய ஹைதர் அலி, இளம்பிறை ரஹ்மான், "காயிதேமில்லத்" அவர்களால் பாராட்டப்பட்ட "கலை உலகக் கதிர்" எம்.கே. முஸ்தபா கவிஞர் வீரை கறீம், கும்பகோணம் வழககறிஞர் மொகிதீன் பாட்சா, பெரியகுளம் இப்ராகீம், டாக்டர் சலீம், திண்டுக்கல் பாரி, முன்னாள் எம்.பி. காதர்ஷா, உத்தமபாளையம் சையத்கான், கூத்தாநல்லூர் உமர்ஹத்தாப், போன்ற பலர் இஸ்லாமியக் கலாச்சாரக் கழகத்தில் இடம் பெற்றுள்ளார்கள்.

இதுபோன்ற சமுதாய ஊழியர்களை அங்கமாகக் கொண்ட எங்களது இஸ்லாமியக் கலாச்சாரக் கழகம் ஆர்ப்பாட்டம் இல்லாது அமைதியான முறையிலே கடந்த ஐந்து ஆண்டு காலமாக சமுதாயப் பணிகளைத் திறம்பட ஆற்றி வருகின்றது.

ஆண்டுதோறும் மீலாது விழாக்களும், சமுதாய முன்னேற்றம் பற்றிய மார்க்கப் பணிகளும், தமிழ்நாடு அரசால் இஸ்லாமிய சமுதாயத்திற்கு நன்மைகள் பல செய்வதற்கு இந்த இஸ்லாமிய கலாச்சார கழகம் தூண்டுதலாக இருப்பதை அப்துஸ் சமத் போன்றவர்களால் உணர முடியாவிட்டாலும் இந்த ஏழை இஸ்லாமிய சமுதாயம் நன்கு உணரும்.

### சமது உணராத சூழ்நிலைஎன்ன?

காலஞ்சென்ற கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் சென்னையை அடுத்துள்ள குரோம் பேட்டையில் ஒரு ஓலைக் குடிசையில் வாழ்ந்து சமுதாயப் பெருமக்களின் ஒட்டுமொத்தமான உணர்வுகளுக்கு உரியவராகத் திகழ்ந்தார்!

பாவம்! அப்துஸ் சமத் ஏழைப் பங்காளர், சென்னையை அடுத்த இந்திரா நகரில் சுமார் ஐந்து கிரவுண்டு நிலத்தில் சுமார் பதினைந்து லட்சம் செலவில் ஒரு சிறிய குடிசை போன்ற பங்களாவில் நவீன வசதிகளுடன் வாழக் கூடிய இவருக்கு எங்களைப் போன்ற உண்மையான ஏழை சமுதாய ஊழியர்களை அறிவதற்கு எப்படி நியாயம் இருக்க முடியும்?

நாங்கள் 'இரால்' ஏற்றுமதியையும், ஆடை ஏற்றுமதியையும், திருக்குர்ஆனின் மொழி பெயர்ப்பை தமிழகத்தின் ஒவ்வொரு பள்ளிகளுக்கும் 'இலவச விநியோகம்' என்று சொல்லி அரபு நாடுகளிலிருந்து லட்சக் கணக்கில் பணம் பெற்றவர்கள் இல்லையே!

இவருடைய வசதி வாய்ப்புகளுக்கு எங்களைப் போன்றவர்களை ஏறெடுத்துப் பார்க்க ஏது நேரம்?

'ஹஜ் பயணிகள் இல்லம்' அரசு கட்ட இருப்பதையும், அதற்காக நிலம் ஒதுக்கியதையும் எள்ளி நகையாடக்கூடிய சமத், உண்மையிலேயே விரும்பி இருந்தால், எந்த அளவுக்கு பணிகள் நிறைவேற்றப் பட்டுள்ளன என்பதை சம்பந்தப்பட்ட இலாக்காக்களுடன் தொடர்பு கொண்டிருந்தால் உண்மை நிலையை உணர்ந்திருக்க முடியும்.

புறம்போக்கர்கள் போல் புறம் பேசுவதற்கே முற்பட்டுவிட்ட சமதைப் பற்றி எங்களது கலாச்சாரக் கழகம் அலசி ஆராய விரும்பவில்லை!

என்றாலும் ஒரு உண்மையைச் சொல்ல விரும்புகிறோம்! அண்ணா சாலையில் உள்ள ஒரு நிலத்தில் மதிப்பீடு என்னவோ அதே தான் பெரியமேடு பகுதி நிலங்களின் விலை! இந்த பால பாடத்தைக் கூட உணர முடியாத சமதைப் பற்றி இந்த சமுதாயம் நன்கு உணரும்!

### உலமாக்கள் ஓய்வூதியம்

தன் வாழ்க்கையின் பெரும் பகுதியை மார்க்கப்பணி ஆற்றுவதற்காக, மஸ்ஜிதிலேயே கழித்துவிட்டு முதுமையில் வறுமைப் பிடியில் வாடிக்கொண்டிருக்கின்ற உலமாக்களுக்கு ஓய்வூதியம் கொடுக்கும் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக அரசின் நல்ல எண்ணத்தை பாராட்டாவிடினும் பரவாயில்லை அதனைத் தடுக்க முயற்சிக்கின்ற, கெடுதல் எண்ணுகின்ற யாராக இருந்தாலும் உலமாக்களின் "பத்துவா" வினின்றும் தப்பிக்க முடியாது.

உலமாக்கள் ஓய்வூதியம் கிடைத்ததா, இல்லையா என்பதை உலமாக்களுடன் தொடர்பு கொண்டுஅறிய 'திராணி' அற்ற சமதை இந்த சமுதாயம் எந்த அளவுக்கு மதிப்பும் மரியாதையும் கொண்டு இருக்கின்றது என்பதை நாம்சொல்லித் தான் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

இவ்வாறு ரங்கூன் சுலைமான் தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

---

### அமைச்சர் ராஜேந்திரன் நிகழ்ச்சிகள்

நவ. 19-ந் தேதி காலை 11-30 மணி ஆற்காடு இரண்டாம் வகுப்பு குற்றவியல் நீதிமன்ற துவக்க விழா, மாலை 5-30 மணி காஞ்சிபுரம் கூட்டுறவு வார விழா.

# டெல்லியில் 800 கத்திகள் கொண்ட லாரி பறிமுதல்

புதுடெல்லி, நவ. 17— அரியானாவில் இருந்து டெல்லிக்கு கடத்தி வரப்பட்ட கத்திகள் கொண்ட லாரி ஒன்றை போலீசார் கைப்பற்றினர்.

இந்த லாரியில் 800 கத்திகள் நன்கு பார்சல் செய்யப்பட்டிருந்தன.

கடந்த 48 மணி நேரத்தில் நகர எல்லையில் பெருமளவில் ஆயுதங்கள் கைப்பற்றப்படுவது இது இரண்டாம்முறை ஆகும்.

---

# சென்னைகுடிசைபகுதி குழந்தைகளுக்கு மருத்துவபரிசோதனை

**சென்னை, நவ. 17- சென்னை நகரில் உள்ள குடிசைப்பகுதிகளில் வசிக்கும் குழந்தைகளுக்கு மருத்துவ பரிசோதனை நடத்தி சிகிச்சை அளிக்கும் வேலைகள் தீவிரமாக நடைபெற உள்ளன.**

தென் இந்திய மூர்துழாவிய கல்வி மற்றும் இலாகா நிறுவனம் சார்பில் சென்னையில் நடைபெற்ற குடும்பக்கட்டுப்பாடு பற்றிய முகாமை நேற்று மக்கள் நல்வாழ்வு துறை அமைச்சர் டாக்டர் அண்டே துவக்கி வைத்து பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

சென்னை நகரில் தற்போது 650 குடிசைப் பகுதிகள் உள்ளன. தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்துக்குச் சொந்தமான குடியிருப்புகளும இத்துடன் அடங்கும்.

இந்தபகுதிகளில் உள்ள குழந்தைகளுக்கு மருத்துவ பரிசோதனைசெய்து சிகிச்சை அளிக்கும் திட்டம் ஒன்றை தமிழக அரசு செயல்படுத்த இருக்கிறது. சுகாதாரம் மற்றும் குடும்ப நலத்துறைப் பிரிவு இந்தப் பணிகளில் தீவிரமாக ஈடுபடும்.

முதலில் இந்தத் துறையினர் குடிசைப் பகுதிகளில் ஆய்வு ஒன்றை மேற்கொள்வார்கள். குடிசைப் பகுதிகளில் உள்ள குழந்தைகளை அவர்கள் சோதனை செய்து அந்தக் குழந்தைகளுக்கு இருக்கும் நோய்கள், பலகீனம் மற்றும் பல்வேறு விவரங்களை கண்டறிவார்கள்.

சென்னை கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி, ஸ்டான்லி மற்றும் சென்னை மருத்துவக் கல்லூரி ஆகியவற்றைச் சேர்ந்த மாணவர்களும் இந்த ஆய்வுப் பணிகளில் ஈடுபட்டு அரசு அதிகாரிகளுக்கு உதவி செய்யவிருக்கிறார்கள்.

விரைவில் இந்தஆய்வுப் பணிகள் தொடங்கப்பட்டு இரண்டு அல்லது மூன்று மாதங்களில் முடிக்கபடும், பின்னர் அந்தக் குழந்தைகளுக்கு சிகிச்சை அளிக்குமவேலைகள் தொடரும்.

இவ்வாறு அமைச்சர் டாக்டர்அண்டே கூறினார்.

சுகாதார துறைச் செயலாளர் கே. லட்சுமி காந்தன்பாரதி, குழந்தைகள் மருத்துவக்கல்லூரி இயக்குனர் டாக்டர் திருஞானசம்பந்தம் மூர்த்துழாவிய நிறுவனத்தின் ஸ்தாபகர் டாக்டர் எஸ், கே. காத்ரி ஆகியோரும் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசினார்கள்.

---

இனக்கலவரம்,

# ஆந்திராவில் 5 பேர் கொலை: 20 வீடுகளுக்கு தீவைப்பு

கடப்பை, நவ. 17— ஆந்திர மாநிலம் கடப்பையில் திப்பிரெட்டிபள்ளியில் இருகோஷ்டிகளிடையே இனக்கலவரம் மூண்டது.

இதில் 5 பேர் கொல்லப்பட்டனர். 20 வீடுகளுக்கு தீ வைக்கப்பட்டது.

கொல்லப்பட்ட ஒருவர் தலை துண்டிக்கப்பட்டு கொல்லப்பட்டார்.

---

அமைச்சர் கே. ஏ. கே. தலைமையில்

# கழகத்தோழர் இல்லத் திருமணம்

தர்மபுரி, நவ. 17— ஒசூர் ஒன்றிய கழகச் செயலாளர் எஸ். எஸ். அபுபக்கர் சகோதரர், எஸ். எஸ். காஜாமுகைதீனுக்கும், சம்சாத்பேகத்திற்கும், சி. எம். அஸ்ரப் அலிக்கும் மும்தாஜ்பேகத்திற்கும் 18-ந்தேதி காலை 11மணிக்கு பள்ளிப்பட்டி, ஹாஜிஅபீப் திருமண மண்டபத்தில் அமைச்சர் கே.ஏ.கே. தலைமையில் திருமணம் நடக்கிறது.

திருமணத்தில் ஏராளமான கழகத்தோழர்கள் பங்கேற்று மணமக்களை வாழ்த்துகிறார்கள்.

# கழகத்தில் இணைந்த தி. மு. க. பிரமுகர்

சென்னை, நவ. 17— மதுரை மாவட்டம் ஆத்தூர் தி.மு.க. ஒன்றிய பிரதிநிதி சு. காமாட்சி, கழகப்பொதுச் செயலாளர் ப.உ.ச. முன்னிலையில் இன்று கழகத்தில் இணைந்தார்.

அப்போது வெள்ளைச்சாமி எம். எல். ஏ. சேது குமரேசன், கரு. நாராயணன், பொம்மையன் நடராசன், மணி, சவுண்டையன் ஆகியோர் உடனிருந்தனர்.

# டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர் காலமானார்

புதுடெல்லி, நவ. 17- சர்வதேச புகழ்பெற்ற டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர் டி. திருவேங்கடம் நேற்று புதுடெல்லியில் காலமானார். அவருக்கு வயது 52.

ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளும் இந்தியப் பெண்கள் டேபிள் டென்னிஸ் குழுவுக்கு திருவேங்கடம் பயிற்சி அளித்து வந்தார்.

கடந்த சில நாட்களாக நோய்வாய்ப்பட்ட அவர் நேற்று சப்தர்ஜங்மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார். நேற்று மாலை அவர் மரணம் அடைந்தார். அவருக்கு மனைவி 2 மகன்கள் 2 மகள்கள் உள்ளனர்.

## கூட்டுறவுத் துறையில்

# பிறமாநிலங்களுக்கு வழிகாட்டும் தமிழகம்: நாவலர் பெருமிதம்

**சென்னை, நவ. 17- கூட்டுறவுத்துறையில் தமிழகம் பிறமாநிலங்களுக்கு வழி காட்டுகிறது என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.**

அனைத்திந்திய 29-வது கூட்டுறவு வார விழா வினையொட்டி நடைபெறும் நிகழ்ச்சியில் புதிய 20 அம்சத்திட்ட நாள் பற்றிய நிகழ்ச்சி நடைபெற்றது. விழாவிற்கு தலைமை வகித்து நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேசுகையில் கூறியதாவது:-

இங்கு நடைபெறும் விழா ஒவ்வொரு நாளும் ஒரு குறிக்கோளின் அடிப்படையில் நடைபெறுகிறது. வளர்ந்து வரும் மக்கள் தொகையின் தேவைகளை பூர்த்தி செய்யவும், ஏழ்மை அகலவும் கூட்டுறவு இயக்கத்தால் தான் முடியும். கூட்டுறவு இயக்க மூலம் சுவீடன், டென்மார்க், ஜப்பான் போன்ற நாடுகள் அளப்பரிய முன்னேற்றம் கண்டுள்ளன.

## வழிகாட்டும் தமிழகம்

அதிக உற்பத்தி இல்லாத நிலையில் அதிகம் பேரை உற்பத்தியில் ஈடுபடுத்துவது கூட்டுறவு முறையாலே சாத்தியம். தமிழகத்தில் 47 வகையான கூட்டுறவு இயக்கங்கள் உள்ளன. கூட்டுறவு இயக்கவளர்ச்சியில் பிற மாநிலங்களுக்கு வழிகாட்டும் அளவிற்கு தமிழகம் முன்னேறியுள்ளது.

இயற்கை சீற்றங்களால் பாதிக்கப்படாத சாதாரண நிலை நிலவும் போது 7 அல்லது 8 ஆண்டுகட்கு முன் 57 லட்சம் டன்னாக இருந்த உணவு உற்பத்தி இன்று 86 லட்சம் டன்னை எட்டும் அளவிற்கு உள்ளது.

நம்மிடம் எல்லா வளங்களிலிருந்தும் அதைச் சரிவரபயன் படுத்தாத காரணத்தால் பின்தங்கியுள்ளோம். ஜனநாயகம் வெற்றி பெற ஜனநாயக மனப்பான்மை எவ்வளவு இன்றியமையாததோ இது போன்றே கூட்டுறவு வெற்றி பெற கூட்டுறவு மனப்பான்மை வளர வேண்டும்.

## அண்ணா சொன்னது

இதைத்தான் அறிஞர் அண்ணா இந்திய நாடு ஏழை நாடல்ல; ஆனால் பெரும்பாலான இந்தியர்கள் ஏழைகளாகஇருக்கின்றனர். ஏனென்றால் அறியாமை, அலட்சியம், கூட்டு மனப்பான்மையின்மை, கூட்டு ஒத்துழைப்பின்மை நாணயமின்மை, நேர்மையின்மை ஒருமைப்பாடு யின்மை ஆகியவற்றால் பிடிக்கப்பட்டுள்ளனர் என்றார். இவைகளை யெல்லாம் விட்டொழித்தால் நாடு வளர்ந்து நல்ல சமுதாய மாற்றத்தைக்காணலாம். ஏழைகள் மேம்பாடு கூட்டுறவு இயக்கத்தால்தான்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்.

விழா துவக்கத்தில் ஜெகந்நாதன் வரவேற்புரையாற்றினார். அமைச்சர் கே. ஏ. கே., தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி மோகனரங்கம், அனகாபுத்தூர் ராமலிங்கம் எம்.எல்.சி., வீட்டு வசதி வாரிய பதிவாளர் சுந்தரம் மற்றும் பலர் பேசினர். பி.கிருஷ்ணன் (பி அண்ட் சி.மில்) நன்றி கூறினார்.

## அமைச்சர் கே. ஏ. கே. பேச்சு

# புரட்சித்தலைவரின் ஆட்சிக்காலம் கூட்டுறவு பொற்காலம்

**சென்னை, நவ. 17- புரட்சித்தலைவரின் ஆட்சிக்காலம் கூட்டுறவின் பொற்காலம் என்று அமைச்சர் கே ஏ. கே. கூறினார்.**

29-வது கூட்டுறவு இயக்க வார விழாவினையொட்டி வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற 3 வது நாள் நிகழ்ச்சியில் கலந்து கொண்டு அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில் கூறியதாவது.

கூட்டுறவு இயக்கம் வலுப்பெறா காலத்தில் கூட்டுறவை விரும்பி வரவேற்ற மாநிலம் தமிழகம் ஆகும். இந்தியாவில் 1904ம் ஆண்டில் அமைப்பு ரீதியான கூட்டுறவு இயக்கம் தோன்றியது. அன்று கூட்டுறவு இயக்கத்தில் முன்னோடியாக இருந்த கிராமம் தமிழகத்தில் செங்கல்பட்டு மாவட்டத்துள்ள திரூர் என்னும் கிராமமாகும்.

## கூட்டுறவின் பொற்காலம்

கூட்டுறவு இயக்கத்தில் தலைசிறந்த அமைப்பு என்பது தமிழகத்தில் தான் உள்ளது. 1977க்குப்பின், புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பேற்றபின் கூட்டுறவு இயக்கம் வியத்தகு சாதனைகளை படைத்து வருகிறது. கூட்டுறவின் பொற்காலம் என்று கூறும் வகையில் வளர்ந்து வருகிறது. கூட்டுறவு நிறுவனங்கள் வளர்ந்த அளவுக்கு கூட்டுறவு மனோபாவம் வளரவில்லை என்பது ஒரு குறையாக இருக்கிறது. 1967 நவம்பரில் நடைபெற்ற விழா ஒன்றில் பேரறிஞர் அண்ணா இதைச் சுட்டிக்காட்டினார்.

## தி. மு. க. மெத்தனம்

கூட்டுறவு இயக்கத்தில் உள்ள குறைகளைக் கண்டறிய சந்தானம் கமிட்டியை அண்ணா அமைத்தார்.

க்குழு 1971-ல் தன் அறிக்கையை அரசிற்கு சமர்பித்தது. ஆனால் அன்று ஆட்சிப் பொறுப்பிலிருந்தோர் (தி. மு. க. ஆட்சி) இது குறித்து சரிவர கவனம் செலுத்தவில்லை. 1977ல் கழகம் ஆட்சிப் பொறுப்பிற்கு வந்தபின் குழுவின் பரிந்துரைகளின் அடிப்படையில் கூட்டுறவிலுள்ள குறைகளைக் களைய நடவடிக்கை மேற் கொள்ளப்பட்டது.

கூட்டுறவு அமைச்சரின் தலைமையின்கீழ் ஒருகுழு அமைக்கப்பட்டு அக்குழு கூட்டுறவிலுள்ள குறைகள் பற்றி ஆராய்ந்தது. அதன் அறிக்கையின் அடிப்படையில் விரைவில் சட்டம் வரவிருக்கிறது.

வரவிருக்கும் புதிய சட்டம் 20 அம்சத் திட்டத்திற்கு கேடயமாக அமையும் என்பது திண்ணம்.

## தமிழகம் முன்னணி

பொது விநியோக முறையில் தமிழகம் மற்ற மாநிலங்கட்கு முன்னோடியாக விளங்குகிறது. தமிழகத்தில் பொது விநியோக முறை மிகச் சிறப்பாக செயல்படுகிறது. சென்னை நகருக்கு சப்ளையாகும் 3.50 லட்சம் லிட்டர் பால் நுகர்வோர் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் சப்ளை செய்யப்படுகிறது.

கூட்டுறவு இயக்கம் செம்மையாக செயல்பட நிலையான அரசும், மக்கள் செல்வாக்கு பெற்ற தலைவரும் வேண்டும். மக்கள் செல்வாக்கு பெற்ற புரட்சித்தலைவர் ஆளும் தமிழகத்தில் கூட்டுறவு இயக்கம் மென் மேலும் வலுப்பெறும்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ கே. பேசினார்.

## பாகிஸ்தானுக்கு

# ராணுவ ரகசியங்களை அளித்த மூவர் கைது

புதுடெல்லி, நவ. 17— ராணுவ ரகசியங்களை பாகிஸ்தானுக்கு அளித்த மூவரை போலீசார் கைது செய்தனர்.

இவர்கள் மூவரும் பாதுகாப்புத் துறையைச் சேர்ந்த ஊழியர்கள். கடந்த 4 ஆண்டு காலமாக இவர்கள் இந்தச் செயலில் ஈடுபட்டு இருந்தனர்.

இந்த மூவரும் பாதுகாப்புத்துறையில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்திப்பிரிவில் இருந்தவர்கள்.

இவர்கள் ரகசியத் தகவல்களை பாகிஸ்தானுக்கு அளிப்பதாக சந்தேகம் வரவே கண்காணிக்கப்பட்டனர்.

பிறகு கையும் களவுமாக பிடிபட்டனர். சர்மா, தர், பாடியா ஆகிய மூவரும் கைது செய்யப்பட்டு அவர்கள் மீது வழக்கும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

# மதுக்கஷாயம் 8 பேர் கைது...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வந்தது.

இந்த கள்ள மதுக் கஷாயம் தயாரிப்பதற்கு மருந்துக்கடை வைத்திருக்கும் ஒருவர் மூலதனம் போட்ட முதலாளியாக இருந்திருக்கிறார்.

அவரது உறவினர் இருவர், அவரது நண்பர்கள் இருவர் ஆகியோர் கைது ஆகியுள்ளனர்.

இந்த வழக்கு தொடர்பாக கைதான மேலும் மூவர் அப்ருவர்களாக ஆகியுள்ளனர். இதில் ஒருவர் டாக்டர்.

இந்த மோசடித் தயாரிப்பில் இவர்கள் 1980-ம் ஆண்டு ஏப்ரல் முதல் 82 ஏப்ரல் வரை ஈடுபட்டதாக தெரியவந்துள்ளது.

## போலி லேபிள்

இவர்களது போலி தயாரிப்பு பாட்டில்கள் மீது ''சந்தன அஸ்வம்'' என்று லேபிள் ஒட்டினார்கள்.

ஒவ்வொரு பாட்டிலும் 500 மில்லி லிட்டர் கொள்ளளவுடையது.

இவர்களுக்கு சொந்தமான வேனில் நகர்ல் விநியோகம் செய்தனர். வெளி மாவட்டங்களுக்கு இந்த சரக்கை லாரிமூலம் அனுப்பினார்கள்.

இந்த கஷாயம் தயாரிப்பதற்கான முறைகள் கேரளத்தில் இருந்து பெற்றதாக கூறப்படுகிறது.

டீக்கடை வைத்திருந்த ஒருவர் மூலம் இந்த முறைகள் பெறப்பட்டதாம்.

ஒரு கிலோ குளோரல் ஹைட்ரேட் அமிலத்தை 1000 லிட்டர் தண்ணீரில் கலப்பார்கள்.

அந்தக் கலக்கலில் இங்கே கிடைக்கக் கூடிய சில இலைகளையும், வேர்களையும் போடுவார்கள். அதன் பிறகு அது சாக்லட் கலரில் காணப்படும். பிறகு பாட்டில்களில் நிரப்புவார்கள்.

ஆனால் பாட்டில்கள் மீது 'சந்தன அஸ்வம்'' என்று போலி லேபிள் இருக்கும்.

பாட்டிலில் 500 மில்லி லிட்டர் என்றும், ஒரு தடவைக்கு 40 மில்லி லிட்டர் சாப்பிடலாம் என்றும் பொய்யாக விவரம் எழுதப்பட்டு இருந்தது.

ஆனால் இந்த பாட்டில் குடிகாரர்களால் மிக மிக விருப்பமாக வாங்கப்பட்டது.

## சாராயத்தை மிஞ்சும் விறபனை

இந்தப் பாட்டில்கள் விற்பனை சில இடங்களில் ஒரிஜினல்கள், சாராய விற்பனையைக் கூட பின்னடைய செய்ததாம்.

ஒரு கிலோ குளோரல் ஹைட்ரேட் கறுப்பு சந்தையில் 100 ரூபாய் விலைக்கு கிடைக்கிறதாம்.

இதை இப்படி வாங்கி அப்படி கஷாயம் என்று மோசடிப் பெயரில் விற்பனை செய்து வந்தனர்.

மதுவிலக்கு கண்காணிப்புத் துறையினர் இப்படிப்பட்ட வழக்குகளை புலன் விசாரணை செய்துள்ளனர்.

அண்மையில் 30 கிலோ குளோரல் ஹைட்ரேட் அமிலத்தை கைப்பற்றியிருக்கிறார்கள். போலீசார் நடத்திய புலன் விசாரணையில் மேலும்பல திடுக்கிடும் விவரங்கள் வெளி வந்துள்ளன.

இதில் சம்பந்தப்பட்ட மருந்துகடை லைசென்ஸ் ஒருவருக்கு தரப்பட்டு இருந்தது. அப்படி லைசன்ஸ் பெற்ற நபர் 1981 செப்டம்பரில் இறந்து விட்டார்.

ஆனால் இவர்கள் லைசென்ஸ் இன்றியே கடையை நடத்தியதாகவும் கூறப்படுகிறது.

டி. ஐ. ஜி. ராஜசேகரன் நாயர் உத்திரவின் பேரில் டெபுடி சூபரிண்டென்ட் எஸ். ஜே சற்குணர் இந்த வழக்கில் புலன் விசாரணை நடத்தினார்.

## பஞ்சாயத்து தேர்தல்:

# அனைத்துக்கட்சி கூட்டம்26-ம்தேதி நடைபெறும்

## அமைச்சர் குழந்தைவேலு அறிவிப்பு

**மேட்டூர், நவ 17- ஊராட்சி மன்றங்கள், ஊராட்சி ஒன்றியங்கள் தேர்தல் பற்றி முடிவு எடுக்க இம்மாதம் 26-ம்தேதி அனைத்துக்கட்சிகள் கூட்டம் நடைபெறும் என்று அமைச்சர் குழந்தைவேலு அறிவித்தார்.**

மேட்டூர் அருகே உள்ள மல்லி குண்டம் என்ற ஊரில் நடந்த விழாவில் பேசும்போது அமைச்சர் குழந்தைவேலு பஞ்சாயத்து தேர்தல் பற்றி குறிப்பிட்டார்.

மல்லி குண்டத்தில் தொப்பையாறுபாலத்தை அமைச்சர் குழந்தைவேலு திறந்து வைத்தார்.

அந்த விழாவில் அமைச்சர் குழந்தைவேலு பேசுகையில் ஊராட்சிகள், ஊராட்சி ஒன்றியங்கள் தேர்தலை எவ்வளவு விரைவில் நடத்த முடியுமோ அவ்வளவு விரைவில் நடத்தவே இந்த அரசு முயற்சித்து வருகிறது.

பஞ்சாயத்துத் தேர்தல் பற்றி முடிவு எடுக்க அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டத்தை நடத்த அரசு ஏற்பாடு செய்துள்ளது.

இம்மாதம் 26-ம் தேதி அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டம் நடைபெறும் என்று கூறினார்.

இதன் பிறகு கொளத்தூரில் அமைச்சர் குழந்தைவேலு நிருபர்களிடம் கூறியதாவது:-

ஊராட்சிகள் தொகுதி எல்லை சீரமைப்பு பணிகள் முடிவடைந்து விட்டன.

அனைத்துக் கட்சிகள் கூட்டத்தில் ஆதிதிராவிடர்களுக்கும், பெண்களுக்கும் இட ஒதுக்கீடு பற்றிய முடிவு எடுக்கப்படும். அந்தத்தொகுதிகள் பற்றிய அரசின் புதிய அறிவிப்பு பிறகு வெளியிடப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு நிருபர்களிடம் கூறினார்.

# ராஜா முகமது பேட்டி...

(1-ம பக்கத் தொடர்ச்சி)

மானியத்தோடு தமிழகக் கிணறுகளிலும் பொதுக்கிணறுகளிலும் காற்றாடியந்திரம் அமைக்க அரசு தீர்மானித்துள்ளது.

பொதுப் பணித்துறையின் கீழ் உள்ளகண்மாய், குளங்கள், ஆகியவற்றில் மீன்பிடிப்பதை நீண்டகால குத்தகைக்கு எடுத்துக் கொண்டு அதை தனியாக அவர்களே ஏலம் நடத்தி 10 20 மடங்கு லாபம் பெறுகிறார்கள். அதை தடுக்கும் வழியில் மீன் பிடிக்கும் உரிமையை அந்தந்த ஆய்வுக்குழுவிடம் விடும் வகையிலும் அந்த பணத்தை கொண்டு கண்மாய்களை சீர் அமைக்கும் பணியை மேற்கொள்ளும் வகையில் சட்டம் ஏற்படுத்த முடிவு செய்துள்ளது.

நீர்ப்பாசன திட்டகட்டுமானப் பணிகளை ஒட்டு மொத்தமாக தனி நபர்களுக்கு கொடுக்காமல் சிறு, சிறு வேலைகளாகப் பிரித்து காண்ட்ராக்டர்காரர்களிடம் அளித்து கட்டுமானப் பணிகளை துரிதப்படுத்தவேண்டும் என்று குழு பரிந்துரை செய்துள்ளது.

செம்பரம்பாக்கம்பூண்டி ஆகிய நீர் தேக்கங்களுக்கு மழைக் காலத்தில் வெள்ள நீர் வரும் சிற்றாற்றில் கேசவளம் என்ற இடத்தில் ஒரு அணை கட்டி மழை நீரை தேக்கிவைக்கலாம என்றும் குழு பரிந்துரை செய்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் ராஜா முகமது தெரிவித்தார்.

# நாகாலாந்து மந்திரி சபை: சுயேச்சைகளுக்கு 'யோகம்'

கோஹிமா, நவ. 17— கடந்த புதன்கிழமை நாகாலாந்தில் நடநது முடிந்த தேர்தலைத் தொடர்ந்து அங்கே மந்திரிசபை அமைப்பது இழுபறியாக உள்ளது. எந்தக் கட்சியில் சேர்ந்தால் மந்திரி பதவி கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சுயேச்சை உறுப்பினர்களுக்கு நல்ல கிராக்கி ஏறபட்டுள்ளது.

அண்மையில் நாகாலாந்தில் நடைபெற்ற தேர்தலில் நாகாலாந்து தேசிய ஜனநாயகக் கட்சிக்கு 24 இடங்களிலும் இந்திரா காங்கிரசுக்கு 24 இடங்களிலும் வெற்றி கிடைத்தன.

12 வேட்பாளர்கள் சுயேச்சையாக போட்டியிட்டு வெற்றிபெற்றனர். இந்த சுயேச்சைகளை எப்படியும் தன் பக்கம் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதில் இந்த இரண்டு கட்சிகளும் தீவிரமாக ஈடுபட்டுள்ளன.

ஒரு கட்சியில் சேருவது பின்னர் அதை விட்டுவிட்டு வேறொரு கட்சிக்கு ஓடிவிடுவது என்ற பழக்கத்தை வைத்திருக்கும் ''ஆயாராம்-காயாராம்'' பேர்வழிகளுக்கு நாகாலாந்தில் நல்ல கிராக்கி ஏற்பட்டிருக்கிறது.

இந்திரா காங்கிரசைச் சேர்ந்த எஸ். சி. ஜமீர் தலைமையில் நாளை மந்திரிசபை அமையவிருக்கிறது. 60 பேர் கொண்ட சட்டசபையில் 24 பேர் இந்திரா காங்கிரசை சேர்ந்தவர்கள். இவர்களுடன் 8 சுயேச்சை உறுப்பினர்கள் சேர்ந்துள்ளதாக எஸ். சி. ஜமீர் தெரிவித்துள்ளார்.

அதே நேரத்தில் நாகாலாந்து தேசியகட்சியின் தலைவரான ஜே. பி. ஜசோக்கியும் தன்பக்கம் 7 சுயேச்சை உறுப்பினர்கள் சேர்ந்துள்ளதாகவும் தனக்கு போதிய மெஜாரிட்டி இருப்பதால் மந்திரி சபை அமைக்க தன்னைத்தான் கவர்னர் எஸ். எம். எச், பர்னி அழைத்திருக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.

தலைமைக் கழக அறிக்கை எண் 99/82

## வடஆற்காடு மாவட்டம் வாலாஜா ஒன்றியகழக தோழர்கள் கவனத்திற்கு...

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தினால்

**என். ரேணு**

(வாலாஜா ஒன்றிய செயலாளர்)

இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் நீக்கிவைக்கப்படுகிறார்.

கழக சார்பு மன்றத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. அண்டே
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
17-11-82

தலைமைக் கழக அறிக்கை எண் 98/82

## செங்கற்பட்டு மாவட்டம் குன்றத்தூர் ஒன்றிய கழகத் தோழர்கள் கவனத்திற்கு...

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தினால்,

1. தி பா. ஜனார்த்தனம் (குன்றத்தூர்)
2. மன்னார் (விருகம்பாக்கம்)

ஆகியோர் இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளில் இருந்தும் நீக்கிவைக்கப்படுகிறார்கள்.

கழக, சார்பு மன்றத்தோழர்கள் யாரும்அவர்களுடன் எவ்விதத்தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு. ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. அண்டே
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
17-11-82

# வாங்கிய கடனைத் தராதே என்போர் தேசத்துரோகிகள்

ம. பொ. சி. பேச்சு

சென்னை, நவ. 17- அரசிடமிருந்து வாங்கிய கடனைத் திருப்பித் தராதே என்று சிலர் தங்களுக்குப் பெயர் வரவேண்டும் என்பதற்காகக் கூறுகிறார்கள். இத்தகையோர் தேசத் துரோகிகள் என்று சட்ட மேலவைத் தலைவர் ம. பொ. சி. கூறினார்.



சென்னையில் நடைபெறும் அனைத்திந்திய கூட்டுறவு வார விழாவின் 2-வது நாள் நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்து சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ.சி. பேசுகையில் கூறியதாவது:—

கூட்டுறவு இயக்கம் ஏழை எளிய மக்களை அநியாய வட்டி வாங்கும் மக்களின் பிடியிலிருந்து காக்கும் இயக்கமாக உள்ளது. கூட்டுறவு இயக்கம் என்பது நாம் நமக்காக அமைத்துக் கொண்ட ஒன்று.

கூட்டுறவு இயக்கம் நம் நாட்டில் தொடங்குவதற்கு முன்பிருந்த நிலையையும், கூட்டுறவு இயக்கம் தொடங்கிய பின் அது எந்த அளவிற்கு மக்களின் பொருளாதார மேம்பாட்டிற்கு உறுதுணையாக இருக்கிறதென்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். கூட்டுறவு இயக்கத்திற்கு எதிரானவர்கள் சமுதாயத்திற்கு எதிரானவர்கள்.

## தேசிய நஷ்டம்

கூட்டுறவு இயக்கத்தில் (அரசிடமிருந்து) பெற்ற கடனைத் திருப்பித் தர மறுப்பது தேசத்திற்கேற்படக்கூடிய நஷ்டமாகும். சிலர் தங்களுக்கு பெயர் வரவேண்டும் என்பதற்காக கூட்டுறவுக் கடனைத் தராதே என்று மற்றவர்களைத் தூண்டிவிடுகின்றனர். அத்தகையோர் தேசத்துரோகிகள் ஆவர்.

உண்மையிலேயே வாங்கிய கடனைக் கட்ட முடியாத நிலையிலுள்ள நலிந்த மக்களுக்கு அரசு உதவுகிறது. அதைவிடுத்து வசதி படைத்தோர் வாங்கிய கடனைக் கட்ட மறுப்பது நியாயமானதல்ல.

இவ்வாறு சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ.சி. பேசினார்.

அரசு அறிவிப்பு:

# டாக்சி பர்மிட் திருத்த கட்டணம் கிடையாது

சென்னை, நவ. 17— டாக்சி பர்மிட்டுகளை திருத்தம் செய்பவர்கள் அதற்கான கட்டணத்தை செலுத்த தேவையில்லை என்று தமிழக அரசு அறிவித்துள்ளது. டாக்சியில் கட்டணம் அதிகரிப்பு இல்லாமல் 5பேரை ஏற்றி செல்லலாம் என்று அரசு அறிவித்திருந்தது. அதற்கான திருத்தம் செய்து கொள்ளவிரும்பும்உரிமையாளர்கள் அதற்கென்றுள்ள கட்டணம் (ரூ. 150) செலுத்தத் தேவையில்லை என்று அரசு அறிவித்துள்ளது.

வருகிற ஜனவரி மாதம் 20-ம்தேதிக்கு முன்னதாக பர்மிட்டில் திருத்தம் செய்து கொள்ள விண்ணப்பிப்பவர்களிடம் கட்டணம் கேட்கப்பட மாட்டாது.

இந்த உத்தரவுக்கு முன்னதாக அந்தக் கட்டணம் செலுத்தியிருந்தால் அது அவர்களுக்கு திருப்பி தரப்படும் என்றும் அரசு அறிவித்துள்ளது.

அமைச்சர் பொன்னையன் தகவல்:

# விவசாயத் தொழில் தொடங்க நிலவள வங்கி கடன் உதவி

கோவை நவ. 17- விவசாயத் தொடர்பான தொழில்களைத் தொடங்க நிலவள வங்கிகள் மூலம் உதவிகள் கிடைக்கச் செய்ய வழிவகை செய்யப்படும் என்று அமைச்சர் பொன்னையன் கூறினார்



கோவை துடியலூரில் கூட்டுறவு விவசாய சங்க விழாவில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டு பேசினார்.

அமைச்சர் பொன்னையன் பேசியதாவது:.

கூட்டுறவு சங்கங்களை சிறப்புமிக்க அமைப்புகளாக மாற்றி அமைக்க ஒருங்கிணைந்த சட்டம் தயாராகிக் கொண்டு இருக்கிறது.

புதியசட்டம்வந்தபிறகு கூட்டுறவு சங்கங்கள் அரசியல் தலையீடு இல்லாமலும், சுயநலவாதிகள் தலையீடு இல்லாமலும் செம்மையாக இயங்க உதவும்.

நிலவளவங்கிகள் இப்போது டிராக்டர்கள் வாங்கஉதவி அளிக்கிறது. விவசாயக் கிணறுகளை ஆழப்படுத்த உதவி வருகிறது.

விவசாயிகளை ஊக்குவிக்க விவசாயம்சம்பந்தப்பட்ட தொழில்களை தொடங்கவும் நிலவள வங்கி உதவி செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன்கூறினார்.

விஜயன், ராஜேந்திரன், எஸ். எம். கருணாநிதி, என். ராமச்சந்திரன், சு. மனோகரன். எல். குமார். எஸ். ஜெகந்நாதன், என். யுவராஜ், மா. வே. இளஞ்சேரன், சேகர், பன்னீர்செல்வம் ஆகியோர் பேசுகின்றனர்.

51-வது வட்ட

## கழகப் பொதுக்கூட்டம்

சென்னை, நவ, 17— சென்னை 51-வதுவட்டம் துறைமுகப்பகுதியிலுள்ள தம்புச்செட்டித் தெருவில் நாளை இரவு 7 மணிக்கு கழகப்பொதுக் கூட்டம் நடக்கிறது.

முகவை தாஜிதின் தலைமையிலும், எம். எஸ் மணி முன்னிலையிலும் நடக்கும் இந்தப்பொதுக் கூட்டத்தில் அடியார். வளர்மதி, இ. மதுசூதனன். ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி. மண்ணடி கிருஷ்ணமூர்த்தி. கு. கஜேந்திரபாபு. எம். பி. ஆனந்தன், என். ஏ. துரை, எஸ். பி. டி.

# சென்னை கலெக்டர் பொதுமக்கள் தொடர்பு அதிகாரிமாற்றம்

சென்னை, நவ. 17— சென்னை மாவட்ட ஆட்சித் தலைவரின் பொதுமக்கள் தொடர்பு அதிகாரியாக கே. கோவிந்த ராஜுலு நியமிக்கப்பட்டிருக்கிறார்.

இதற்கு முன்னதாக இவர், சென்னை அரசினர் தோட்டத்திலுள்ள 'நினைவகம்' பிரிவில் பொதுமக்கள் தொடர்பு அதிகாரியாக பணியாற்றினார்.

நகர்ப்புற தியேட்டர்களுக்கு

# ஒட்டுமொத்த வரி: புரட்சித்தலைவருக்கு படஅதிபர் பாராட்டு

சென்னை நவ. 17. நகர்ப்புற சினிமா தியேட்டர்களுக்கு ஒட்டுமொத்த வரி கொண்டு வந்ததற்கு முதல்வர் புரட்சித் தலைவருக்கும், தமிழக அரசுக்கும் படஅதிபர் ஏவி எம். சரவணன் பாராட்டு தெரிவித்துள்ளார்.

சினிமா படங்களுக்கான 'காம்பவுண்டிங்வரி' முறையை நகரங்களுக்கு தமிழக அரசு விஸ்தரித்து அதற்கான ஒரு அவசர சட்டத்தை பிறப்பித்தது.

இதற்கு பட அதிபர் ஏவி. எம். சரவணன் பாராட்டு தெரிவித்துள்ளார்.

அவர் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியுள்ளதாவது:—

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இந்திய பேசும்பட பொன் விழாவில் கலந்து கொண்டு பேசிய போது "தமிழக திரையுலக பிரச்சினைகளை என்னுடன் கலந்து பேசும் அளவிற்கும், என்ன தேவை என்பதை எடுத்து சொல்லும் அளவிற்கும் 'தமிழ்நாடு பிலிம்சேம்பர்' என்று ஒன்றை துவங்கி என்னிடம் வாருங்கள் என்று பேசினார், அவர் பேசியது இன்றும் என் காதில் ஒலித்துக்கொண்டு தான் இருக்கிறது.

அது கடந்த டிசம்பர் மாதம் நடந்திருந்தாலும், இந்த ஒரு ஆண்டில் அதை செய்து முடிக்க இயலாததற்கு பல காரணங்கள் இருப்பினும் தமிழகத் திரைப்படதுறைக்கு தங்களால் இயன்றதை செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் "காம்பவுண்டிங்" வரியை மற்ற நகரங்களிலும் அமுல் நடத்தி உள்ளது.

## பாராட்டு

தீபாவளியன்று வெளியான எல்லா படங்களுக்கும் அதன் பலன் கிடைக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்துடன் அவசர சட்டம் பிறப்பித்ததை மனப்பூர்வமாக வரவேற்கிறோம். எத்தனையோ பிரச்சினைகள் இருந்தபோதும் திரைப்படத் தொழில் நன்கு வளரவேண்டும்என்ற நல்லெண்ணத்தை அவ்வப்போது முதல்வர் புரட்சித் தலைவரும். அமைச்சர்கள் எஸ்.டி.எஸ்.சும், ஆர். எம். வீ.யும் இத்தொழில் சம்பந்தப்பட்ட நன்மைகளை செய்து வருகிறார்கள்.

அவர்களுக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் என் நன்றி.

முதல்வர் புரட்சித் தலைவர் கூறியபடி தமிழ்நாடு பிலிம் சேம்பர் சீக்கிரமே உருவாக்க தமிழ்நாடு திரைப்பட உலகத்தைச் சேர்ந்த தயாரிப்பாளர்கள், வினியோகஸ்தர்கள், திரை அரங்கு உரிமையாளர்களைக் கொண்ட குழு முழு முயற்சியுடன் பணியாற்றிக் கொண்டிருக்கிறது.

1977-ல் நலிந்திருந்த திரைப்படத் தொழிலை காப்பாற்றியே தீருவேன் என்று சபதம் எடுத்து "காம்பவுண்டிங்" வரி என்ற புது முறையான வரியை அமுல் நடத்தி தமிழ்த் தரைப்படத் தொழிலை வளர்த்து அதை பாதுகாத்து வரும் காவலனாக இருநதுவரும் தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்கு எங்களது நன்றி.

இவ்வாறு அவர் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

யானை ரெயில்

# துணை மானேஜர் டில்லியில் மரணம்

புதுடெல்லி, நவ. 17— கேரளத்தில் இருந்து ஆசிய விளையாட்டுப் போட்டிக்காகச் சென்ற யானை ஸ்பெஷல் ரயில் துணை மானேஜர் புதுடெல்லியில் மரணம் அடைந்தார்.

அவரது பெயர் ராமன் நாயர். வயது 50.

கேரளத்தில் இருந்து 34 யானைகள் ஏற்றிச் செல்லப்பட்ட யானை ஸ்பெஷல் ரயிலில் துணை மானேஜராகச் சென்றார்.

இவருக்கு காய்ச்சல் ஏற்பட்டு சப்தர்ஜங் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு இறந்து விட்டார். கேரளத்தில் இருந்து புறப்படும்போதே இவருக்கு காய்ச்சல் இருந்ததாக அதிகாரி ஒருவர் கூறினார்.

மேலும் பலருக்கு காய்ச்சல் ஏற்பட்டுள்ளது. டெல்லி பருவநிலை இவர்களுக்கு ஒத்துக் கொள்ளவில்லை என்று அவர் கூறினார்.

ராமன் நாயர் மரணத்தை ஒட்டி யானைக்காட்சி ரிகர்சல் நேற்று ரத்து செய்யப்பட்டது.

# சுலோசனா சம்பத் மக்கள் குறை கேட்டார்



சென்னை, நவ. 17— பெரம்பூர் பகுதியில்உள்ள குடிசை பகுதிகளை குடிசை மாற்று வாரிய தலைவர் சுலோசனா சம்பத் நேரில் சென்று பார்வையிட்டார் மோகனமுதலி தோட்டம் மேயர் கிருஷ்ண மூர்த்தி நகர், பெரியார் நகர், சத்தியவாணிமுத்து நகர். காமராஜர் காலனி ஆகிய பகுதிகளுக்கு சுலோசனா சம்பத் சென்றார். அங்கு பொது மக்களிடம் குறைகளை கேட்டறிந்தார்.

அப்பகுதிக்கு குடிநீர் வசதி, சாலைவசதி, தெரு விளக்கு, மற்றும் குழந்தைகள் காப்பகம் ஆகியவற்றை செய்து தரும்படி அப்பகுதி மக்கள் அவரிடம் தெரிவித்தனர்.

அவர்களுடைய கோரிக்கைகளை பரிசிலித்து உடனடி நடவடிக்கை எடுக்குமாறு சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அவர் உத்தரவிட்டார்.





நெடுஞ்சாலை

ஊரகப்பணித் துறை

## ஒப்பந்தப் புள்ளி அறிவிப்பு

டெண்டர் நோட்டீஸ் எண் 13-82 - தவ

நாள்: 9-11-82

தமிழ்நாடு ஆளுநர் அவர்களுக்காகவும், கோயமுத்தூர் வட்டம் நெடுஞ்சாலை ஊரகப்பணித்துறை கண்காணிப்புப்பொறியாளர் அவர்களால் கீழ்க்கண்ட வேலைக்கான மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகள் 8-12-82ம் நாள் பிற்பகல் 3-00 மணி வரை (அலுவலகக் கடிகாரப்படி) மேற்படியார் அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளப்படும். வரப்பெற்ற ஒப்பந்தப்புள்ளிகள் அதே நாள் 8-12-82 பிற்பகல் 3-15 மணி அளவில் கண்காணிப்புப்பொறியாளர் அவர்களால் திறக்கப்படும்.

| வ.எண் | வேலையின் பெயர் | கோட்டம் | முன்வைப்பு தொகை | தகுதியான வகுப்பு |
|---|---|---|---|---|
| 1. | மொரப்பூர் மாரண்டஹள்ளி சாலையில் கி.மீ. 36/6ல் ஓர்பாலம் கட்டுதல். | கிருஷ்ணகிரி | ரூ. 6,500 | இரண்டாம் வகுப்பு அதற்கு மேலும் |

ஒப்பந்தப் புள்ளிகள் நிபந்தனைகள், வரைபடங்கள் ஆகியவற்றை கிருஷ்ணகிரி (நெடுஞ்சாலை ஊரகப் பணித்துறை) கோட்டப்பொறியாளர் அவர்களிடம் மேற்படி வேலைக்கு ரூ. 104.50 (ரூபாய் நூற்றி நான்கு பைசா ஐம்பது) மட்டும் விற்பனை வரி உட்பட (திருப்பித் தரப்பட மாட்டாதது) செலுத்தி அலுவலக நாட்களில் அலுவலக நேரத்தில் 1-12-82 முதல் 7-12 82 முடிய (இரு நாட்கள் உட்பட) விண்ணப்பித்துப் பெற்றுக் கொள்ளலாம்.

கண்காணிப்புபொறியாளர், (நெ. ஊ. ப.)
கோவை.

கோயமுத்தூர்
நாள்: 9-11-82

DIPR - 66696/ 82-14/ maa



# நடுரோட்டில் குறுக்கே நடந்தால் புதுவித தண்டனை

சென்னை, நவ. 17— போக்குவரத்து விதிகளை கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் நடு ரோட்டில் குறுக்கே பாய்ந்து நடந்து செல்பவர்களுக்கு ஒரு புதுவித தண்டனை அளிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

சில பாதசாரிகள் ரோடு ஓரங்களில் ஜாக்கிரதையாக நடக்காமல் ஏதமமாங்கு நடைபோட்டு, ஆடி அசைந்து செல்வதுண்டு. இவர்கள் போக்குவரத்து விதிகளை கொஞ்சமும் லட்சியம் செய்வதில்லை. சில படித்தவர்களே ரோடுகளில் நடந்து சென்று கொண்டிருக்கும் போது திடீரென்று குறுக்கே பாய்வார்கள்.

எப்படியாவது ரோட்டை கடந்து சென்று மறுபக்கம் சென்று விட வேண்டும் என்பது அவர்கள் எண்ணம். இப்படி திடீரென்று ரோட்டின் குறுக்கே நடந்து செல்வதால் விபத்துக்கள் ஏற்படுவதற்கு இவர்கள் காரணமாகி விடுவதும்உண்டு.

இப்படி ரோட்டின் குறுக்கே நடந்து செல்பவர்களை பிடித்து அவர்களுக்கு அதே இடத்தில் தண்டனை அளிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

எந்த இடத்தில் அவர்கள் குறுக்கே நடக்கும் போதுபிடிபட்டார்களோ அதே இடத்தில் அவர்களை ஒரு மணிநேரம் நிற்க வைப்பது தான் இந்தப் புதுவித தண்டனை.

சென்னை நகரின் முக்கிய போக்குவரத்து பகுதிகளான இரண்டொரு இடங்களில் இப்படி நிறுத்தி வைத்து அவர்களை மற்றவர்களும் பார்ப்பதனால் மீண்டும் இதுபோன்ற தவறுகளை பொதுமக்கள் செய்யாமல்இருக்க ஏதுவாக இருக்கும்என்று போக்குவரத்து போலீஸ் துணைக்கமிஷனர் கே. காசிம் குறிப்பிட்டுள்ளார்.

குடிநீர் வாரியத் தலைவர்

# ஏ. கே. அரங்கநாதன் நிகழ்ச்சிகள்

நவ. 18ந்தேதி மாலை 6 மணி சேலம் கூட்டுறவு வார விழா. இரவு வேலூர். 19ந் தேதி மாலை 5. 30 மணி வேலூர் கூட்டுறவு வார விழா.